Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 5



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 39 பராபவ வைகாசி 1966 மே | இதழ் 5

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர்: மூ. அருணாசலம், எம். ஏ.,
துணைப் பத்திராசிரியர்: வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.
ஆண்டுச் சந்தா ரூபா. 3 தனிப்பிரதி அணா 4

# சமாஜச் செய்திகள்

## சமாஜச் செயற்குழுக் கூட்ட அறிவிப்பு

29—5—66 ஞாயிறன்று காலை 9-30 மணிக்கு சமாஜ அலுவலகத்தில் செயற்குழுக் கூட்டம் நிகழும். மாதக் கணக்கு சரி பார்த்தல், சிறப்புக் கூட்டங்கள் நடத்துதல் முதலிய பல பொருள்கள் பற்றிய முடிவுகள் தீர்மானிக்கப் பெறும். உறுப்பினர்கள் யாவரும் தவறாது வருமாறு கேட்டுக் கொள்ளப்பெறுகிறார்கள். (செயலாளர்)

நம் சமாஜத்தால் நடத்தப்பெறும் ஆங்கில முத்திங்களிதழாகிய "சைவ சித்தாந்தா"வுக்கு உறுப்பினராகப் பதிவு செய்துள்ளீர்களா? இல்லையேல் உடனே பதிவு செய்து கொள்ள வேண்டுகின்றோம். நம் ஆங்கில இதழைப் பற்றிய மதிப்புரையாக 1966 ஏப்ரல் இதழில் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்தில் வெளியான செய்தியைக் கீழே நோக்குவீர்களாக.

"சைவ சித்தாந்த"

ஆங்கிலப் பத்திரிகை; கால் வருடத்திற்கு ஒரு முறை வெளியிடப்படுவது. வெளியிடுவோர்: சைவ சித்தாந்த மஹா சமாஜம். ஆசிரியர்: நல். முருகேச முதலியார். கிடைக்கும் இடம்; காரியதரிசி, சைவ சித்தாந்த மஹா சமாஜம், 12 கிழை மாடத்தெரு. மயிலாப்பூர், சென்னை-4. வருட சந்தா ரூ 5. பக்கம்: 80.

60 ஆண்டுகளாகச் சமாஜம் சித்தாந்தத்தைப் பரப்பும் அரும்பணியில் ஈடுபட்டு, சைவத் திருமுறைகளையும், சித்தாந்த சாஸ்திரங்களையும் திறம்பட அச்சிட்டு மலிவான விலைக்கு விற்று வருவதையும், 'சித்தாந்தம்' என்னும் மாதாந்தத் தமிழ் பத்திரிகையை நடத்தி வருவதையும் பலரும் அறிவர். இப்போது இவ்வாங்கிலப் பத்திரிகையைத் தொடங்குதல் கற்றாராலும் மற்றாராலும் வரவேற்று ஆதரிக்கத்தக்கது. சைவ சித்தாந்தத்தில் நன்கு ஊறியுள்ளவர் ஆசிரியராகப் பணி செய்கிறார். சைவ சித்தாந்தக் கொள்கைகளின் தனிச் சிறப்பைப்

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 39 | பராபவ வைகாசி 1966 மே | இதழ் 5

## மடாதிபதிகள் மாநாடு

(துணை ஆசிரியர்)

நம் தமிழ் நாட்டிலுள்ள பெரிய மடாதிபதிகளின் மாநாடு ஒன்று அண்மையில் சென்னையில் நடந்ததாகத் தினத்தாள்கள் மூலம் தெரிந்தோம். இது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். அவர்கள் மாநாட்டின் முடிவுகளுள் தலையாய இடம்பெற்றது நம் சமயக்கொள்கைகளைப் பாமர மக்களிடத்தும், சேரிவாழ் மக்களிடத்தும் பரப்பி அவர்களுக்கு நம் சமயத்தில் உண்மைப் பற்று உண்டாக்க வேண்டும் என்பதேயாகும். இம்முடிவு இக்காலத்து மிகவும் வேண்டற்பாலது ஒன்றாகும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. ஆனால் இம்முடிவின்படி எம்முறைகளை மேற்கொண்டு அம்மக்களுக்கு நம் சமயப் பிடிப்பினை உண்டாக்கப் போகிறார்கள் என்பது தான் தெரியாததாயுள்ளது.

அண்மையில் கண்ட ஒரு காட்சி அதிர்ச்சியில் ஆழ்த்தியது. மகாபலிபுரத்தின் பக்கத்தில் இரண்டு கற்கள் தொலைவில் பவழக்காரன்சாவடி என்று ஒருஊர் உள்ளது. அதற்கு அருகில் ஒரு சேரி இருக்கிறது. சென்னையிலிருந்து மகாபலிபுரம் போகும் பேருந்து மூலம் திருப்போரூர் வழியாகச் சென்றால் இச்சேரியைக் கடந்தே செல்லவேண்டும்.

இங்கு இச்சேரிக்குப் பக்கலில் ஒரு இந்துக் கோவில் ஒன்றும் உள்ளது. இக்கோவிலுக்கும் சேரிக்கும் நடுவில் உள்ள சில ஏக்கர் இடங்களை ஒரு கிறித்தவத்தாபனம் வாங்கி, முதலில் அச்சேரிவாழ் மக்கள் அவ்விந்துக்கோவிலைப் பார்க்காதிருக்கக் கூடிய நிலையில் ரோமன் கத்தோலிக்க மருத்துவநிலையம் ஒன்றைக் கட்டியிருக்கிறது. பின்னர் ஒரு கிறித்தவக்கோவில், அதனை அடுத்து ஒரு ஆரம்பப்பள்ளியும் கட்டப்பட்டு இருக்கின்றன. இதற்கு மேலும் ஒரு பெருநிலையைத் தற்போது கிறித்தவ சமயத்தார் மேற்கொள்கின்றனர். வரிசையாக நன் முறையில் சுமார் முப்பதுவரை அழகிய சிறு வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. அவ் வீடுகளில் குடியேறுபவர்கள் கிறித்தவ மதத்தைத் தழுவவேண்டும் என்று கூறுகின்றனராம். பழைய சேரியில் உள்ள குடிசைகளில் நம் இந்து மதத்தில் ஊறிய கிழவர்கள், கிழவிகள் மாத்திரம் உள்ளனர். அவர்கள் பெற்றெடுத்த அருமைச் செல்வர்கள் எல்லோரும் கிறித்தவர்களாய்ப் புது வீடுகளில் புகுந்துறைகின்றனர். உணவு வசதிக்கு இக்கிழங்கள்கூட அங்குதான் போய் அருந்தி வருகின்றனர் எனக் கேள்விப்பட்டோம்.

தங்க இடம், நோய்க்கு மருத்துவம், அறியாமையைப் போக்கப் படிப்பு, வணங்கக் கிறித்தவக் கோயில், அன்றுடம் குடும்பத்தொல்லைகளைப் போக்கி ஆறுதல்கூற கிறித்தவ சமய அன்னையர் ஆகிய இவைகளுக்கு மேல் ஒரு சாதாரண மகனுக்கு வேறு என்னவேண்டியுளது? அங்கு ஒரு விளம்பரப்பலகை தொங்கவிடப்பட்டிருந்தது. "ஆண்டகை மதியாஸ் பாதிரியாரின் ஞாபகார்த்தமாக ஏற்படுத்தப்பட்ட மாதிரிக் கிராமம்" என்ற பொருளில் அப்பலகை விளக்கியது.

இவ்வாறு மாதிரிக்கிராமம் என்று கூறியதற்கேற்ப தண்ணீர் வசதி (tap system) முதலிய வசதிகள் யாவும் செவ்வனேயுள்ளன. இக்கிராமம் அமைக்க சமூக நலப் பிரிவிலிருந்து எவ்வளவு அரசியலாரின் துணையைப் பெற்றார்களோ? அறியோம். இது போன்ற பல செய்திகளையும் அலசி உள்ளூரப் பார்த்தால்தான் தெரியவரும்.

அவ்வாறு அரசியல் துணை பெற்றிருந்தால் நம் அரசியலாரின் பணமும் கூட மக்களைக் கிறித்தவர்களாக்க மறைமுகமாகப் பயன்பட்டு வரவும் ஏதுவாகிறது என ஊகிக்கவும் இடமுண்டு. பல கிறித்தவப் பள்ளிகள் அரசியலாரின் உதவிபெற்றுக் கல்வியைப்பரப்புவது போன்று வெளிக்குக் காட்டி உள்ளூர சமயத்தைப் பரப்பி வருவதும் பலர் அறிந்த இரகசியம் ஆகும்.

தன்னலம் கருதாக் கிறித்தவ சமயத் தொண்டர்கள் தங்கள் முழு அறிவையும் பயன்படுத்தி மக்களைக் கிறித்தவர்களாக்கி எண்ணிக்கையை அதிகமாகச் செய்து தங்கள் பெருமையை மேலும் அதிகமாக நிலைநாட்ட முற்படுகின்றனர். நம் சமய அறிஞர்கள் இதனைத் தக்கவாறு ஊன்றிச் சிந்திப்பார்களாக.

நம் சமயத்தில் தன்னலம் கருதாத் தொண்டர்கள் உளரா? அப்படியிருந்தாலும் ஒவ்வொருவர் ஒவ்வொரு திக்குக்கு மனம்போனபடி சென்று அங்கொன்று இங்கொன்றாகச் சிறு பணிகளைச்செய்து அமைதியுற்று வாணாளைக்கழித்துச் செல்கின்றனர். தொண்டர்களை ஆற்றுப்படுத்தக் கிறித்தவர்களைப் போன்று நமக்குக் குருமார் படிப்புக்கு ஒரு தாபனம் உண்டா? படித்தால் வேலையில் அமர்த்தி, தன் சாப்பாட்டுக்காவது வசதி செய்து கொடுத்து அத்தொண்டர்களை ஊக்கப்படுத்தி வேலைவாங்கத்தக்க சூழ்நிலை உண்டா?

ஆகவே மாநாடு கூட்டினால் மாத்திரம் பயனில்லை. சைவக் குருமார் படிப்புக்குரிய ஒரு கல்லூரி நிறுவவேண்டும். நல்ல தொண்டர்களைச் சேர்க்கவேண்டும். அவர்கள் தொண்டுகள் பரிமளிக்கத் தக்க வகையில் அவர்களை ஆற்றுப்படுத்தவேண்டும். எல்லாவற்றிற்கும் பணவசதி வேண்டும். மனமிருந்தால் பணம்கிடைக்காமல் போகாது. அதனைக்கொண்டு நல்வழியில் பயன்படுத்தி நம் சமய உண்மைகளைப் பரப்பி திருநீற்றொளி விளங்கச் செய்ய வேண்டும்.

அறநிலைய இலாகாவினர் மாநாடு கூட்டியதால் மாத்திரம் அமைதிகொள்ளக்கூடாது. இம்முடிவினைச்செயற்படுத்த ஆவன கருதுவார்களாக. இல்லையேல் இந்து அறநிலைய இலாகாவின் பலம் குறைந்து (கிறித்தவ சமயம் மேலோங்கின்) போவதில் வியப்பில்லை அன்றோ !

தற்போதே நம் மூவர் முதலிகளால் தேவாரப் பாடல் பெற்ற பல தலங்களில் உள்ள திருக்கோயில்கள் பர சமயத்தவர்களால் சூழப்பெற்றுள்ளன என்பதை நினைக்கும்போது மனம் வருந்துகின்றது.

திருச்சக்கரப்பள்ளி என்னும் சோழநாட்டுத் தலம் இஸ்லாமியர்களால் சூழப்பெற்றுள்ளதாகவும் சிலசமயங்களில் அவர்களால் பல துன்பநிலைகள் ஏற்பட்டதாகவும் தினத்தாள் வாயிலாயும் கண்டோர் மூலமும் அறிந்துள்ளோம்.

திரு இலம்பையங்கோட்டூர் என்ற தொண்டைநாட்டுத் தலத்தில் தான் "எனதுரை தனதுரையாக" என்ற அருமைத் தேவார வாக்கு எழுந்துள்ளது. அத்திருப்பதியில் சில குடும்பங்களே யுள்ளன. அவ்வளவு குடும்பங்களிலும் உள்ள மக்கள் கிறித்தவர்கள். ஒரு கிறித்தவர் கோயிலும் உள்ளது. அத்திருக் கோயிலைச் சுற்றிச் சில சைவர்களைக் குடியிருத்தி நன்னிலைக்கு அக்கோயிலைக் கொணரச் செய்ய வேண்டாவா ?

திருக்கடவூர் மயானம் என்ற சோழநாட்டுத் தலத்துக்குச் சுமார் பதினைந்தாண்டுகளுக்கு முன் செல்லும் வாய்ப்பு ஏற்பட்டது. அப்போதே அம்மயானத்திலும் கிறித்தவர் ஆதிக்கம் கால்கொண்டு வலுப்பெற்று இருக்கக் கண்டோம். திருக்கடவூர் விரட்டம் பக்கலிலிருந்தும் காலனிடம் விரம் காட்டிய பெருமானின் அருள் இம்மக்களிடத்து இல்லாதது என்னையோ ? அபிராமி அம்மையாரின் அருள்தான் வாழும் வகையை வகுத்துத் தரவேண்டும். இவைபோன்று இன்னும் எத்தனை திருப்பதிகள் மோசமான சூழ்நிலையில் உள்ளனவோ? அறியோம்.

ஆகவே எப்போதும் நம் திருஞானசம்பந்தப் பெருமானைப் போன்று தொண்டுள்ளம் கொண்டவராய்ப் பாமர மக்களிடையே நம் சமயக் கொள்கைகளைப் பரப்பக் கூட்டம் கூட்டமாக அன்புள்ளத்தோடு நம்பெருமக்கள் செல்ல வேண்டும். நம்மால் ஆவனவற்றைத் தேவை யறிந்து துணையாகச் செய்யவேண்டும். நம் சமயப் பெருமைகளை அவர்கள் அறிந்துளம் கொள்ளத்தக்க சூழ்நிலையை உண்டாக்க வேண்டும். இவ்வாறு நம் சமயத்துக்கு ஒவ்வொருவரும் ஒல்லும் வகையான் அறவினை ஆற்றிச் சிவபுண்ணியப்பயனை யடையக் கேட்டுக்கொள்கின்றேம்.

---

வாழ்த்துப் பகுதி :—

# க. வஜ்ரவேலு முதலியார் அறுபதாண்டு நிறைவு

(ஆசிரியர்)

சைவ சித்தாந்த சிகாமணி, சித்தாந்த ஞான பானு, நாவலர் க. வஜ்ரவேல்முதலியார் அவர்கள் 24—4—1966இல் அறுபதாண்டு நிறையப் பெற்றார்கள் அவர்களுக்கு நமது உளம் நிறைந்த வாழ்த்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேம். இன்றைய சைவ உலகில் சைவசித்தாந்த சமயத்தை, பண்டைய ஆசாரியர்கள் கருத்துக்குச் சிறிதும் முரண் இல்லாமல் பிற சமயங்களான வேதாந்தம் முதலியவற்றினின்றும் வேறு பிரித்து, அவற்றேடு எவ்விதக்காழ்ப்பும் தோற்றமல், சமயவுணர்வுக்குப் புறம்பான, தரத்தில் தாழ்வான கதைகள் கருத்துக்களைப் புகுத்தாமல், இது தனித்த ஒரு தத்துவ சாஸ்திரம் என்று ஏனைய சமயத்தாரும் தெளிவாக உணருமாறு, உணர்த்தவல்லார் தமிழ்நாட்டில் மிகஅரியர்; அவர்களுள் இவர் தலையாயவர்.

இவர் காஞ்சியில் 24—4—1906இல் செங்குந்த மரபில் கச்சபாலய முதலியார்-அம்மாக்கண்ணம்மையார் புதல்வராகப் பிறந்து, காஞ்சியிலும், சென்னையிலும் பச்சையப்பர் கல்லூரிகளில் பயின்று காஞ்சிப்பள்ளியிலேயே ஆசிரியராகி, பின் உயர்ந்து இன்றுவரை தலைமையாசிரியராக இருந்து வருகிறார். இருமுறை திருமணமாகி புத்திரப்பேற்றோடு காஞ்சியில் அமைதியான இல்வாழ்க்கை நடத்திவருகிறார்.

இவருடைய சமயக்கல்வியும் ஒழுக்க விசேடமும் பல பதவிகளை இவருக்குத் தந்தன. 1934 முதல் பல ஆண்டுகள் காஞ்சி மெய்கண்டார் கழகத்தில் அமைச்சராயிருந்திருக்கிறார். தருமபுர ஆதீனத்தார் இவருக்கு "ஆதீன வித்துவான்" என்று பட்டம் சூட்டி, இவரைத் தங்கள் குழுக்களில் ஒருவராகக் கொள்ளப் பார்த்தார்கள். அதன்படியே இவர் 12—11—44 முதல் 7—6—46 வரை தருமபுரம்தம்பிரான் கல்லூரியில் தலைவராயிருந்தார். மடத்தின் சார்பில் ஆசிரியர் பதவிபெற்றிருந்தது, கல்வியிலும் சாத்திரத்திலும் கருத்தைச் செலுத்த இடங் கொடுக்காமையால், இவர் அதிலிருந்து விரைவில் விலகிக் கொண்டார்.

1949 இல் தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையார், இவருடைய சமய அறிவைப் பெரிதும் போற்றி ந. சிவகுருநாதப்பிள்ளை தலைமையில் 'சித்தாந்த சிகாமணி" என்ற பட்டமளித்தார்கள். 1954 இல் மதுரை ஆதீனத்தலைவர் "சித்தாந்த ஞானபானு" என்ற பட்டமளித்தார். காஞ்சியிலுள்ளவரும் இவரைப் பெரிதும் போற்றினார்கள். காஞ்சி ஞானப்பிரகாச சுவாமிகள் "நாவலர்" என்ற பட்டமளித்தார்கள். இவரது அரிய ஆசிரியப்பணியை உணர்ந்து இந்திய ஜனாதிபதி டாக்டர் இராதாகிருஷ்ணன் 19—11—64 இல் இவருக்குப் பரிசும் விருதும் அளித்தார்.

இளமையிலிருந்து இவருக்குச் சைவசமய ஈடுபாடும் தோய்வும் தோன்றி வளர்ந்து பெருகின. நல்வினையினால்

இவர் மூன்றாவது பாரம் படித்துக்கொண்டிருந்த போது, பதின்மூன்று வயதில், நடேசசுவாமிகள் என்பவர் இவரைக் கண்டு தனியே அழைத்து, முறையாகத் திருநீறு இடக் கற்பித்தார். விநாயகர் அகவல், கவசம், ஆறுமுக நாவலர் செய்த இரண்டாம் சைவ வினாவிடை, நான்காம் பாலபாடம், பெரியபுராண வசனம் ஆகியவற்றைப் பயிலச் செய்தார். பின்னர் சிதம்பரம் மௌன சுவாமிகள் மடத்திலிருந்து காஞ்சிபுரம் வந்து நடேச சுவாமியுடன் இருந்த திருமலை சுவாமி என்பவர் இவருக்கு விநாயக உபாசனை கற்பித்து, இவருடைய வாழ்க்கையை நெறிப்படுத்தப் பெரிதும் காரண மாய் இருந்தார். இவர் குமரகுருபரர் நூல்களையும், சிவப் பிரகாசர் நூல்களையும் கற்பித்தார். திருமலை சுவாமியே இவரைச் சொற்பொழிவு செய்வதில் நன்கு பழக்கினர்.

பின்னர் காஞ்சி குமரகோட்ட வித்வான் சோணாசல பாரதியிடம் இவர் பழகநேர்ந்தது. அவரிடம் கந்தபுராணச் சுருக்கம் முழுமையும் பாடம் கேட்டார். இவற்றின் பின் னரே இவருக்கு ஞானியார் சுவாமிகளுடைய தொடர்பு ஏற்பட்டது. சுவாமிகள் இவரை ம. பாலசுப்ரமணியமுதலி யாருக்கு அறிமுகம் செய்துவைத்து, சென்னை மணலி மாணவர் விடுதியில் தங்கி மேல்படிப்புப்படிக்க வசதிசெய்து வைத்தார். இவ்வாறு இவருக்கு ஏற்பட்ட தொடர்பு, பின்னர் சமாஜத் தொடர்பாக வளர்ந்தது.

1922-23 இல் ஞானியார் சுவாமிகள் காஞ்சிபுரம் வந்த போது இவர் அவரிடம் வெங்கைக் கோவை முதலிய இலக் கியங்கள் பாடம்கேட்டதோடு, சிவஞான போதம் முதலிய சாத்திர நூல்களையும் பாடம் கேட்டு, சிவபூஜையும் பெற்றுக் கொண்டார். இவருடைய படிப்புக்கள் பெரும்பான்மையும் தானாகப் பயின்றுகொண்டனவே. காஞ்சியிலிருந்த ஒரு தெலுங்கு பண்டிதரிடம் இவர் வடமொழி பயின்றார்.

பங்களூரில் நடந்த சைவ இளைஞர் மகாநாட்டில் இவர் தலைமைவகித்தார். 1958 இல் மயிலம் சமாஜ மகாநாட்டில்

இவர் தலைமை வகித்தார் இவை அன்றியும் தூத்துக்குடி, பூவாளூர் ஆகிய சைவ சித்தாந்த சபைகளில் தலைமைபூண்டிருக்கிறார். திருச்சிராப்பள்ளிச் சபையில் சொற்பொழிவாற்றியிருக்கிறார். இவர் நடத்திய சமயப்பாட வகுப்புகள் மிகப்பல. பாபநாசத்தில் முதலில் சமயபாடம் தொடங்கினர். பின்னர் தருமபுரம், சென்னை, மஞ்சக்கொல்லை முதலிய இடங்களில் பல சமய நூல் வகுப்புக்கள் நடத்தியிருக்கிறார். மயிலத்திலும் திருச்சிற்றம்பலத்திலும் சிவஞானபோதம் முழுமையும் முறைபாக வகுப்பு நடத்தியிருக்கிறார். காஞ்சிபுரத்தில் கந்தபுராணம் முழுமையும் பிரசங்கமாகச் சொல்லியிருக்கிறார். சமயத்துறையில் இவருக்குச் சிவஞானசுவாமிகளே தெய்வம்.

ஆங்கில அறிவு இவருடைய தத்துவ சாஸ்திர ஆராய்ச்சிக்குத் துணையாக அமைந்திருக்கிறது. இவ்வறிவினால் இவருக்குச் சமய அறிவில் தெளிவும், திட்டமான ஒற்றுமை வேற்றுமை உணர்வும், நன்கு பொருந்தின. ஆங்கிலத் தத்துவ சாஸ்திரம் படித்தவர்களோடு சமமாக நின்று அவர்கள் வாதத்தால் மயங்காது, தம்முடைய சுத்த சைவ சித்தாந்த நெறியில் பிறழாது, தம் கருத்தை நிலைநாட்டும் வன்மை இவரிடம் பொருந்தியுள்ளது. யாரையும் வன்மையாகக் கண்டிக்கும் இயல்பு இவரிடம் இல்லை. ஆனால் பிறர் கூற்றை ஒட்டியே சென்று அதை மறுத்துத் தம் கருத்தை நிலைநாட்டுவார்.

இவருடைய சொற்பொழிவுகள் தனி அழகு வாய்ந்தவை. ஆரம்பத்திலிருந்து கடைசி வரை தர்க்க ரீதியாக ஒரு சமய நூல் போல இவர் பேச்சு அமைந்திருக்கும். மேடையில் இவர் பேசுவது மிகவும் தெளிவாகவும், திருத்தமான வாக்கியங்களாகவும் அமைந்திருக்கும்; அப்படியே எழுத்தில் எழுதி வைத்தால் பிறகு மாற்றவோ, திருத்தவோ அவசியமிராது. எனினும் இவரது பேச்சு சற்றே கற்றவர்களுக்கு மட்டுமே சிறப்பாகப் பயன்படுவதாகும். பாமருக்கு

ஏற்றவாறு பாமரர்பாஷையில் இவருக்குப் பேசத்தெரியாது. சபைக்கு ஏற்றபடி தம் நிலையில் இழிறங்கிப் பேச இவருக்கு வராது. சபையோர் மெச்சுவதற்காக வேண்டாதவற்றைச் சொல்லமாட்டார்; ஹாஸ்யம் இருக்காது. பிறர் மறுக்கும் போது கண்டிக்கும் சுபாவமுடையவர். தம் கருத்தில் மிகுந்த தெளிவும், ஆழ்ந்த உறுதியும் உடையவர்.

இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதியது மிகக் குறைவு. ஒவ்வொரு பேச்சும் ஒரு தனி நூலாக அமையும் சிறப்புப் பெற்றிருந்தாலும், நூல் வடிவத்தில் வந்தன மிக மிகச் சிலவே. இவர் காசி மடத்தின் திட்டப்படி காசியி லும், பிரயாகையிலும் 1951 இல் செய்த சொற்பொழிவுகள் ஒரு சிறு நூலாக வெளிவந்துள்ளன. வேறு சில ஆங்கிலக் கட்டுரைகளும் ஆங்காங்கு வெளிவந்துள்ளன. இவருடைய முக்கியமான சேவை, "திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே" என்று வெளியிட்ட சிறு நூலாகும். இந் நூல் வெளிவந்த பிறகு தமிழ்நாட்டில் அநேகர் இவருடைய கருத்தை அப்படியே ஏற்றுக்கொண்டு பேசியும் எழுதியும் வருவது மகிழ்ச்சிக்குரியது.

முதலியார் அவர்கள் இனி ஆசிரியப் பதவியிலிருந்து விலகி ஓய்வுபெறப் போகிறார்கள். சிறப்பான வேலை இவரால் தமிழிலும ஆங்கிலத்திலும் செய்ய முடியும். "இதுதான் சைவ சித்தாந்தம்" என்று மேலைநாட்டுத் தத்துவ சாஸ்திரம் படித்தவர்களும் உணரும் வகையில் திட்டமாகச் சொல்லக் கூடியவர் இவர் ஒருவரே. இனி இவர் தெளிவான சைவ சித்தாந்தநூல்கள் இல்லாத குறையை நீக்குவதற்குத் தமிழி லும் ஆங்கிலத்திலும் நூல் எழுதுவதில் தம் நேரத்தைச் செலவிட வேண்டும். ஆண்டவன் இதற்கேற்ற உடல் வலிமையையும், பிற வசதிகளையும் இவர்களுக்கு அருள் வாணாக!

வாழ்க வச்சிரவேலனார்!

அஞ்சலிப் பகுதி :—

# இருக்கம்–ஆதிமூல முதலியார்

(மு. அருணாசலம்.)

இவ்வாண்டு (1966) இருக்கம் ஆதிமூல முதலியார் பிறந்த 100வது ஆண்டு. சைவமக்கள் இப்பெரியாரை எப்போதும் நினைவில் இருத்தக்கடமைப் பட்டுள்ளவர்கள். இவர் சென்னையில் இராணுவ கணித பரிசோதனை இலாக்காவில் பரிசோதகராக இருந்தவர். பிறந்தது 1866 ஏப்ரல். சைவப்பிரசாரம் குறைந்திருந்த காலத்தில், மிகவும் விரிவான சமயப்பிரசாரம் செய்தார், பல சைவ சபைகள் அமைத்து அவற்றின் மூலம் சைவம் வளர்க்க அரும்பாடு பட்டார். மயிலாப்பூர் திருவிழாவில் பெரும் சொற்பொழிவுகள் நடத்திவைத்து, அறுபத்து மூவருக்கு உற்சவ விமானங்கள் செய்வித்தார். நண்பர் பலரோடு சேர்ந்து சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம் தோற்று வித்தார். பல ஆண்டுகள் இதன் அமைச்சராய் இருந்தார். நண்பர்களோடு திருவொற்றியூர் முதலான தலங்களில் மண் வெட்டி, பாரை, கூடை முதலியன கையிலேந்திச் சென்று வீதி, ஆலயம், நந்தவனம் ஆகிய இடங்களில் உழவாரப் பணி செய்தார். அன்னதானம், விழா, பிரசங்கம், பாடசாலை, சைவப்பிரசாரம் ஆகியவை இச்சபையின் வேலைகள்; தமது வீட்டைக்கூட அடைமானம் வைத்துப் பொருள் பெற்றுச் சமயத்துக்காகச் செலவு செய்திருக்கிறார்.

இவருடைய வேலைகளில் மிகவும் சிறப்பானது நூல் வெளியீடு. முதன் முறையாக, பன்னிருதிருமுறைத் திரட்டைச் சிறிய பதிப்பாக வெளியிட்டார். சைவம் என்ற சமயப் பத்திரிகை ஒன்று தாமே ஆசிரியராய் இருந்து சிவனடியார் திருக்கூட்டத்தின் ஆதரவில் வெளியிட்டார். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் சைவசமய வளர்ச்சிக்கு ஊன்றுகோலாய் இருந்தவர்களில் ஆதிமூல முதலியார் மிகவும் முக்கியமானவர். இப்பத்திரிகை நல்லசாமிப்

பிள்ளை, சுவாமி வேதாசலம், காந்திமதிநாத பிள்ளை, பால்வண்ண முதலியார் முதலான அக்காலத்துப் பெரியார் பலருடைய கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்தது. சைவமக்கள் அக்காலத்தில் இப் பத்திரிகையைத் தங்கள் வாழ்க்கையை நெறிப்படுத்தும் கருவியாகக் கொண்டிருந்தார்கள். இன்று ஏற்பட்டுவரும் சமய வளர்ச்சிக்கெல்லாம் வித்தாக உள்ளவர்களில் இப்பெரியாரும் ஒருவர். எளியமுறையில் நல்ல பொருள்களைத் தாங்கி வெளிவந்த எளிய கட்டுரைகளைப் படித்துப் பல்லோர் பயன்பெற்றுர்கள். இவர் 1910-11 ஆண்டுகளில் நம் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் அமைச்சராகவும் இருந்தார்.

இப்பெரியாருடைய பிறந்த நூருவது ஆண்டாகிய இந்த ஆண்டில் இவருடைய நினைவுக்கு நாம் அஞ்சலி செய்யக் கடமைப்பட்டுள்ளோம்.

---

# தில்லை விளாகம்

## (மு. அ.)

இடம் ; திருக்களரிலிருந்து முத்துப்பேட்டைச்சாலைக்குச் செல்லும் கற்சாலையில், கோபால சமுத்திரம் என்ற ஊரிலிருந்து கிழக்கு நோக்கித் தில்லை விளாகத்திற்கு ஒரு கற்சாலை செல்கிறது. இதில் சுமார் 1½ மைல் தூரத்தில் கோயில் இருக்கிறது.

பெயர் : ஊரின் பெயர் தில்லைவிளாகம். கோயிலை ஊரார் ராமசாமி கோயில் என்று சொல்லுகிருர்கள். காரணம், இங்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள ராமர் திருவுருவம். இங்கு சுவாமி பெயரே நடராஜமூர்த்தி என்றும், அம்பிகை உமை அம்பிகை என்றும் சொல்கிருர்கள்.

கோயில் : கொஞ்ச நாளைக்கு முன் இங்கு ஒரு சிறிய சிவலிங்கமும் அம்பிகைஉருவமும் மட்டும் இருந்தன. பின்

னர் மிகவும் அருமையான நடராஜர் திருவுருவமும் ராம சாமி முதலான திருவுருவங்களும், மண்ணை அகழ்ந்த போது கண்டெடுக்கப்பட்டன. இவற்றை வைப்பதற்குக் கூட கோயிலில் இடமில்லாமல் இருந்தது. இந்தச் சிலை களின் அருமையை உணர்ந்த முத்துப்பட்டினம் பெரி. நா. நா. செட்டியார், இத்தலம் பாடல் பெறுநிருப்பினும், புதி தாகக் கருங்கற்கோயில் கட்டினர். கோயிலை உட்சென்று பார்க்கும் போது, அதன் திருத்தமான அமைப்பு, திருக் கண்ணூர் கோயில் திருப்பணியை நினைவூட்டுகிறது. சிறிய கோபுரம். உட்புறம் எல்லாப் பாகங்களும் கல் வேலை; பிரகாரம்; இல்லை. நிருதியில் பெரிய விநாயகர். அடுத்து மூலக்கருவறை; இதன்தென்புறம் தட்சணாமூர்த்தி; அடுத்து சிறு துர்க்கை. பின்னர் முருகர் கோயில். பின் அம்பிகை கோயில், கடைசியில் லக்ஷ்மி கோயில். இவையாவும் ஒரே வரிசை, வேறு தனி நடராஜர் உள்ளனர்.

நடராஜ மூர்த்தி: கண்டெடுத்த நடராஜ மூர்த்தி தெற்கு நோக்கிப் புதிய கோயிலில் முன்புறம் அமைக்கப் பட்டிருக்கிறார். மூர்த்தி மிகவும் அழகான பெரியவடிவம். திருவாசி ஏறக்குறைய வட்டமானது. இதில் சுடர்கள் நிறைந்துள்ளன. இம்மூர்த்தியின் திருமுகப் பொலிவு வேறுஎங்குமே எளிதில் காண்பதற்கு இல்லாதது. உருவம் முழுமையுமே மிகவும் பிரகாசமாய் உள்ளது. இப்போதே செய்துவைத்தாலும் கூட, இதைவிடப் பிரகாசம் சற்றுக் குறைவாய்த்தான் இருக்கும். இதன் பொலிவுக்குக் கார ணம், இதன் உலோகக் கலவையில் அதிக அளவு தங்கம் சேர்த்தமை என்று பெரியோர்கள் சொல்வார்கள். இந்த மூர்த்தியைப் பார்த்தவர்கள்.

"ஆளவுடைக் கழற்சிற் றம்பலத்தான் ஆடல்கண்டால்
பீளையுடைக் கண்களாற் பின்னைப் பேய்த் தொண்டர்
காண்பதென்னே"

என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கு உண்மை என்றே உணர்வார்கள். அருகில் சிவகாம சுந்தரி அம்பிகையும் அதே பொலிவுடன் தோற்றம் அளிக்கிறார். மாணிக்க வாசகரும் பக்கத்தில் உள்ளார்.

திரு உசாத்தானம் நடராஜமூர்த்தியும் இதே தோற்ற முடையவர். கோட்டூரில் கண்டெடுத்து இன்னும் பிரதிஷ்டை செய்யப்படாமல் இருக்கின்ற நடராஜமூர்த்தியும் இவைகளைப்போன்று பெரிய திருவுருவம்உடையவர். தில்லை நடராஜர் இங்கு வந்து தங்கியமையால் இவ்வூர் தில்லைவிளாகம் எனப் பெயர் பெற்றது என்று சொல்வர்.

இது பாடல்பெருத தலம். இக்கோவிலுக்குத் தென் புறத்தில்பிராகாரத்தில் தனியாக அமைக்கப்பட்டுள்ளது, வீர கோதண்டராமசாமி கோவில். வில்லேந்திய ராமரும், சீதையும், இலட்சுமணனும் நடராஜர் போலவே மிகவும் அழகான பிரகாசமான திருவுருவங்கள். இம்மூர்த்திகளுக் காகவே செட்டியார் மிகவும் நன்ருக இக்கோயிலைக் கட்டி யுள்ளார். மூல உருவங்கள் இல்லை. இம் மூர்த்திகளே மூலவுருவங்களாகப் பாவிக்கப்படுகின்றன. உற்சவமூர்த்தி கள் தனியே முன்புறத்தில் எழுந்தருளப்பட்டுள்ளனர். இவர்கள் சிறிய உருவம். வாயிலில் வழுவழுப்பான பெரிய துவாரபாலகர் வடிவங்கள்; சுவரில் தென்புறம்விநாயகரும் சங்க நிதியும்; வடபுறம் பதும நிதியும் நாகராஜனும்; சேனை முதலிகள் தனியே உள்ளனர்.

இந்த மூர்த்திகள் எந்தக் கோயிலுக்கு உரியவர்கள், எக்காலத்தில் துலுக்கருக்குப் பயந்து இங்கு மண்ணில் புதைக்கப்பட்டார்கள் என்பது ஒன்றும் தெரியவில்லை. இவ்வாறு புதைத்து வைக்கப்பட்ட உருவங்கள் நாடெங் கும் மிகப் பல. இவையாவும் மிகச்சிறந்த உருவப்பொலிவு உடையனவாய் விளங்குகின்றன. இக்காலத்தில் செய் கின்ற திருவுருவங்களில், இவற்றின் அழகில் மிகச்சிறு பகுதிகூடக் காணப்பெறவில்லை. இவ்வாறு சிலைகளைப் பத்திரப்படுத்திய காலத்தில் குழி தோண்டிப் புதைத்த தில்லை. அருகில் உள்ள கிணற்றிலோ, பெரிய நீர்நிலையிலோ கயிறு கட்டிச் சிலைகளை இறக்கிவிட்டு மணலைப்போட்டுத் தூர்த்திருக்கிருர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிரும்.

இவ்வாறு கிடைத்த மூர்த்திகளை அழகானகற்கோயில் கட்டி எழுந்தருளப் பண்ணிவைத்த நகரத்தாரை மிகவும் பாராட்ட வேண்டும்.

இங்ஙனமாக, மண்ணுள் புதையுண்டிருந்த நடராஜ மூர்த்திகளை எடுத்து மீண்டும் பிரதிட்டை செய்தமையால் சிறப்புற்ற தலங்கள் மிகப் பல. உதாரணம்: கோட்டூர், காட்டூர் (வைப்பு,) ஆற்றூர் (மந்தாரம் என்ற வைப்புத் தலம்) போன்றன. எங்கும் கண்டெடுத்த நடராஜமூர்த்தி, அப்பர் திருவாக்குக்கு-''என்று வந்தாய் என்னும் எம்பெருமான் திருக்குறிப்பு''க்கு இலக்கியமாய்த் திகழ்கின்றன. சுதந்திரமடைந்து இத்தனை ஆண்டுகளாயினும் கூட, இம்மூர்த்திகளைக் குறித்த தனி ஆராய்ச்சி நடைபெறுமலிருப்பது சைவ மக்கள் இன்னும் தங்கள் உறக்கத்திலிருந்து விழிக்கவில்லை என்பதையே உணர்த்துகிறது.

---

# அப்பர் கண்ட அம்மையப்பர்

(G. M. முத்துசாமி பிள்ளை)

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்னும் சிறந்த கொள்கையைக் கைப்பிடித்துத் தாய்தந்தையரைப் பேணிப் பாதுகாத்து வரும் மைந்தர்கள், பின்னர் தெய்வத்தை அன்னையும் பிதாவுமாகக்கொண்டாடி வழிபடுவர். இத்தகைய கோட்பாடு யாவரும் கருத்திற் கொள்ளத் தக்கது. ஏனெனில், எல்லாருக்குமே, திருக்களிற்றுப்படியார் கூறுவதுபோல,

"அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்—அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார்போல் நிற்பார் அவர்"

அம்மை வடிவில் உள்ள சத்தியுடன் கூடிய சிவத்தை வழிபடுவதேயன்றிச் சத்தியைத் தனித்து வழிபடும் முறையைச் சமய ஆசிரியர்கள் வகுத்துக் கொடுக்கவில்லை. "சிவ" என்பதிலும், "சி" என்னும் எழுத்து பதி அட்சரம் ஆகவும், "வ" என்னும் எழுத்து "பரை" அட்சரமாகவும் அமைந்துள்ள நுட்பம் காணலாம் இதுவே அம்மையப்பனது கோலமாகும்.

"ஒருபக்கம் புலித்தோலாடை, ஒருபக்கம் துகிலாடை; ஒருபக்கம் சங்கக்குழை, மறுபக்கம் சுருண்ட தோடு; ஒருபக்கம் பால்வெண்ணீறு, மறுபக்கம் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்; ஒருபக்கம் சூலாயுதம், மறுபக்கம் வளையல்"

இது அர்த்தநாரி வடிவம். இவ்வாறு இறைவன் விளங்குவர் என மணிவாசகனார் குறிப்பிடுகிறார். அப்பர் பெருமான் இவ்வகையில் அளிக்கும் காட்சியை இனிக் காண்போம் :

"வலப் பக்கம் சிவன் பாகம். வலக்காதில் சங்கு புரள்கிறது. இடப்பக்கம் அம்மை பாகம். இப்பாகத்தில் காதில் செந்நிறமான காதோலை பிரகாசிக்கிறது. வலப்பக்கத்தின் (சிவ பாகத்தின்) வாய்ப்பாகம் வேதம் ஓதுகிறது; இதைக் கேட்கும் இடப் பக்கத்து (உமை பாகத்தின்) உதட்டின் பாகம் மகளிருக்கே உரித்தான முறையில் புன்முறுவல் செய்கிறது. சிரசில் வலப்பக்கம் சிவபெருமானுக்குரிய சடைப்பாகம் இருக்கிறது. இடப்பக்கத்தில் உமைக்குரிய கூந்தல் பாகம் அமைகிறது." இக்கருத்துக்களைக்கொண்ட அப்பர் பாடிய பாடல் சித்திரம் .—

" புதுவிரி பொன்செயோலை யொருகாதோர் காது
சுரிசங்க நின்றுபுரள
விதிவிதி வேத கீத மொருபாடு மோத மொருபாடு
மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாகம் மாதர்
குழல்பாக மாக வருவர்
இதுஇவர் வண்ண வண்ணம் இவளவண்ணவண்ணம்
எழில் வண்ண வண்ணம் இயல்பே"

உலகங்கள் எல்லாம் சர்வசங்கார காலத்தில் அழிந்து விடும். பிரம தேவர், விஷ்ணு, உருத்திரர், மயேசுரர், சதாசிவர் என்னும் வரிசையில் ஒரு மூர்த்தத்தில் மற்ற மூர்த்தம் ஒவ்வொன்றும் ஒடுங்கும் எல்லா மூர்த்தங்களும் இறுதியில் ஆதிசத்தியினிடத்து ஒடுங்கும். இந் நிலைகளை ஆதிசத்தியாகிய அம்மை ஒருவரே இறுதி நிலை வரையில் நேரில் காண்கிறார். ஆதலால் "சாக்ஷிணி"

என்பது அவருக்குள்ள பெயர்களில் ஒன்று. கடைசியில் ஆதி சத்தியும் சுத்த சிவத்தில் அடங்கும். சுத்தசிவம் அதுசமயம் செயலற்று இருக்கும்; காரணம் சத்தியும் ஒடுக்கம் பெறுவதால். (உலக வழக்கிலும் ''சத்தியிருந்தால் செய். இல்லை என்றால் சிவனே என்றிரு'' எனக் கூறுவதிலிருந்தும் இவ்வுண்மையை உணர்ந்து கொள்ளலாம்.) பகலெல்லாம் உழைத்துக் களைத்துவிட்ட உழைப்பாளி, அடுத்தநாள் உழைப்பிற்குத் தன்னைத் தகுதியாக்கிக் கொள்வதற்கு இரவில் உறங்கி, மறுநாள் எழுந்திருப்பது போன்று, பிறவியாத்திரைகள் பலவற்றை மேற்கொண்ட உயிர்களும் (பல பிறவிகள் எடுத்த உயிர்கள்) இளைப்பாறுமாறு, இறைவன் அவற்றைச் சிலகாலம் விட்டுவைக்கிறார். இளைப்பாறிய உயிர்கள் மேலும் முன்னேற வேண்டும் என்னும் நோக்கில், இறைவன் அவற்றிற்கு உடல் உறுப்புக்களை அளித்து இவ்வுலகில் தோற்றுவிக்கிறார். இவ்வாறு தோற்றுவிக்க அவர் அருளைத் திருமேனியாகக் கொள்கிறார். இதுவே ''சிற்சத்தி'' யாகும். ''சித்'' என்பது அறிவு. ''சத்திதான் தடையிலா ஞானம்'' எனச் சிவஞான சித்தியார் கூறுவதும் இதுவாகும். பின், சதாசிவமூர்த்தி முதலிய மூர்த்தங்கள் ஒருவர் பின் ஒருவராகத் தோன்றுவர். இது முதற்கொண்டு பிரளய காலமாகிய ஊழிக்காலம் வரையில் தாமும் தம் தையலுமாகிய சத்தியுடன், சிவபெருமான் நிற்கும் காலம் வரையில் தாம் வகிக்கும் கோலம் தொன்மைக் கோலமாகும். எல்லா உயிர்களும் தம் தம் வினைப்பயனை அனுபவித்துத் தக்க முறையில் இறைவழிபாடு புரிந்து, அவ்வினையும் ''பையப்பையும்'' வகையில் வாழ்க்கையை மேற்கொள்ள உதவும் பொருட்டே, இத்தொன்மைக் கோலத்தைப் பெருமான் மேற்கொள்கிறார். இவ்வாறு அவர் கோலம்கொள்வதால் அண்டத்திலுள்ள (சரம் அசரம் எனப்படும்) சராசரங்களிலெல்லாம், ஆண்பெண் என்னும் இருவகை இனங்கள் தோன்றுகின்றன. சரம் என்பதில் மனிதர், விலங்குகள் என்னும் இனங்கள் அடங்கும். அசரம் என்பதில் மரஞ்செடிகள் அடங்கும். மர இனத்தில் சேர்ந்த பனையிலும் ஆண்பனை, பெண்பனை என்னும் இரு பாலினங்கள் உள்ளன என்பதை அறிவோம். எல்லா உயிர்களும் ''சத்தி

யும் சிவமுமாகிய சரிதையில் பயில்கின்றன'' எனச் சேக்கிழார் காட்டும் உண்மைக்கு விளக்கம் காண்பார் போல், ''சத்தியும் சிவமுமெனத் தன்னுள்ளே இருவேறு வகைப்பட்ட தன்மைகள் வைத்தலான்—பல வேறுவகைப்பட்ட உயிர்வடிவங்கள் அனைத்தும் குறியானும் குணத்தானும் அவ்விருயோனிக்குள் இருவேறுவகையாயடங்கித் தம்முட்கூடிக் களித்து வாழ நிற்கும் இயல்பு'' என எடுத்துக் காட்டுகிறார் மாதவச் சிவஞான முனிவர்.

இப்பேருண்மையை அப்பர்பெருமான் தாம்பாடியருளிய திருவையாற்றுப் பதிகத்தில் நமக்கு எடுத்துக்காட்டுகிறார். ''திருக்கயிலைக் காட்சியைக் கண்டாலன்றி, அழியும் உடம்புடன் மீளேன்'' என்பதான திடமான மன உறுதியுடன், வடதிசை நோக்கிக் கங்கையைக்கடந்து பன்னெடுந்தூரம் நடந்து சென்ற அடிகள், தம்முடைய உடல் உறுப்புகள் தேய்வதைக் கண்டும் மனம் தளரவில்லை. அதுசமயம் ''திருவையாற்றில் கயிலைக்காட்சியைக் காண்க'' என்பதாக இறைவன் வாக்கைக்கேட்டார் அடிகள். அங்குள்ள ஒரு திருக்குளத்தில் மூழ்கினார். ''யாதும் சுவடு படாமல்'' தென் திசையிலுள்ள திருவையாற்றுக் குளத்தில் வந்தெழுந்தார். சிவபெருமான், பார்வதிதேவியாருடன் திருக்கயிலையில் இருந்த காட்சியைக் கண்டார். அக்காட்சிக்கு முன்னோடியாக, யானை, சேவல், குயில், மயில், அன்றில் பறவை, ஏனம் (பன்றி), கருங்குரங்கு, நாரை, கிளி, காளை ஆகியவை தம் தம் துணைகளுடன் ''சத்தி சிவமாம் தன்மையில்'' இருப்பதைக் கண்டார். அவர்பாடிய திருப்பதிகம் இதைத் தெரிவிக்கிறது. இப்பதிகத்தின் முதல் பாடல் சிறுவர் முதல் பெரியோர் வரையில் ஓதுவதொன்றாகும்.

''மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடி
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவாரிவா பின் புகுவேன்
யாதுஞ் சுவடுப டாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடியோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்''

இதை, ''பொன் மலைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பில்
தன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதை

பன்மை யோனிக ளியாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயில்முன் வந்தார்"

எனச் சேக்கிழார் நமக்குத் தெரிவிக்கிறார்.

இதுவே அன்பின் சிகரம். இத்தகைய தெய்வப் பண்பாடு மணிவாசகனார் அருளிய திருக்கோவையாரில் விளக்கம் பெறுகிறது.

இணைபிரியாத நிலையில் சென்றுகொண்டிருந்த ஒரு காதலனையும் காதலியையும் கண்டபோது, என்றுமே சாதாரணமாகச் சத்தியினிடமிருந்து பிரிந்திராத தில்லைச் சிற்றம்பலவனை, அவர்கள் இருவரையும்கருதி அவர்களைக் கைகூப்பி மற்றொருவர் வணங்கியதாக நாம் அறிகிறோம். மனிதரை மனிதராகக் காண்பதிலும், அவரிடமுள்ள தெய்வநிலையைக் காண்பது சிறந்ததன்றோ? காதலனுடன் சென்றுவிட்டாள் ஒரு மகள். அவ்விருவர்களையும் தேடிச்சென்ற செவிலித் தாய் வழியில் ஒரு ஆடவர் தம் காதலியுடன் வருவதைக் கண்டாள். "அன்பர்களே உங்களைப் போன்ற இருவர்கள் இவ்வழியே சென்றதைப் பார்த்தீர்களா?" என அவர்களை நோக்கித் தாய் வினவினாள். அப்போது அந்த ஆடவர் கூறுகிறார்: "தாயே நீங்கள் கூறிய தன்மையுடையவர்களை ஒரு குன்றின் சமீபத்தில் கண்டோம். அவர்கள் எவ்வாறு சென்றார்கள் என்றால், அக் காதலனது கழலும் அப் பெண்மணியின் சிலம்பும் ஒருபுறம் இருந்தன – அவரது வெண்பட்டும் அப் பெண்மணியின செம்பட்டும் மின்னின. இருவர் வடிவங்களும் ஒரு வடிவமென ஒத்திருந்தன. அவ் வடிவம் எவ்வாறு இருந்தது என்றால் எல்லாவற்றையும் உடைய தம் காதலியுடன் ஒரு வடிவாய் விளையாடும் தில்லைச் சிற்றம்பலவன் என நாங்கள் கருதி, இது ஒரு நன்மையான செயல் எனக்கொண்டு அச் சிறந்த காட்சியைக் கண்டு கை தொழுதோம்." எனக் கூறினர். இப்பாடல் எத்தகைய அருமையான கருத்தைக் கொண்டுள்ளது.

மின்றொத் திடுகழல் நூபுரம்
வெள்ளைச் செம்பட்டு மின்ன

ஒன்றுரைத்திட வுடையாளொ டொன்
றும் புலி யூரனென்றே
நன்றுரைத் தெழிலைத் தொழவுற்
றன மென்ன தோர் நன்மைதான்
குன்றத்திடைக் கண்டன மன்ன
நீ சொன்ன கொள்கையரே''

(திருக்கோவையார்)

அப்பர் வகுத்த முறையும் மணிவாசகனுர் காட்டிய உதாரணமும் அன்பைப் பெருக்கிடும்; ஒழுக்கத்தை நிலைநாட்டும்; உலகினையே சீர்திருத்தும் எனவும் கொள்ளலாம்

இவ்வாறு தத்துவமுறையில் இறைவனை அம்மையப்பனுகக் கண்டதன்றி, குழந்தைகள் தம் தாய்தந்தையருடன் கொஞ்சி விளையாடுவது போன்று அப்பர் அடிகளும் அம்மை யப்பனைத் துதிக்கிருர். திருமயிலையில் இறைவழிபாடு செய்த பின்னர் திருவொற்றியூர் வந்தடைகிருர். அங்கு வீற்றிருக்கும் இறைவனுக்குத், ''தியாகேசர்' என்பதும் ஒரு பெயர் ஆகும். அவர் புரிந்த தியாகத்தைப் பற்றி எண்ணுகிருர்: ''இமயம் என்னும் மலைக்கு அரசனுகிய பர்வதராஜன் குலமகளாகிய பார்வதி தேவிக்குச் சிவபெருமான் தமது உடலின் இடப்பாகத்தையே கொடுத்ததுமன்றி, தமது நெற்றிக்கண்ணில் பாதியையும் கொடுத்து விட்டார். எனவே அவர் இனி ஒன்றரைக் கண்ணன்', என்னும் கருத்தில்.

''இன்றரைக் கண்ணுடை யாரெங்கு மில்லை யிமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட்பாவைக்குக் கூறிட்டநாள்
அன்று அரைக் கண்ணுங்கொடுத்து உமையாளையும்
பாகம்வைத்த
ஒன்றரைக் கண்ணன்கண்டீர் ஒற்றியூருறை யுத்தமனே''

எனப் பாடுகின்ருர். அவரது வடிவத்தைப்பற்றி சிந்தைத்துதி புரிந்தவர், அவரது வீரத்தைப்பற்றியும் இவ்வாறே குறிப்பிட்டுள்ளார் திரிபுரதகனம் செய்தது சிவபெருமானுடைய எட்டு வீரச்செயல்களுள் ஒன்று. திரிபுரத்தை அழிக்கச் சென்ற போது. அவர் மேரு மலையை வில்லாக வளைத்துத் தமது இடப் பக்கம் தாங்கிச் சென்ருர். தமது வலப் பக்கத்துக் கைவிரல் கொண்டு நாணேற்றுவது அவரது கடமை; இது சுலபமானது. மாபெரும் பாரமுள்ள வில்லைத் தாங்கிச்

சென்றது எங்கள் அம்மையின் பாகமன்றோ? இவ்வாறு இருக்க சிவபெருமானே! நீவிரே திரிபுரம் எரித்ததாக எவ்வாறு சொல்ல இயலும்'' என்பதான கேள்வியை அச் சிவபெருமானிடமே அப்பர் கேட்கிறார். அப்பாடலை நாம் இன்றும் கேட்டுப் பயின்று பயனடையலாம்.

''கற்றார்பயில் கடலுகைக்கா ரோணத்தெங்கள் கண்ணுதலே
விற்றாங்கியகரம் வேனெடுங்கண்ணி வியன்கரமே
நற்றாணெடுஞ்சிலை நாண்வலித்த கரநின்கரமே
செற்றார்புரஞ்செற்ற சேவகமென்னை கொல்செப்புமினே''

இனி, இறைவன் அப்பர் அடிகளை எவ்வாறு கண்டார் எனச் சிந்திப்போம் அப்பர் அடிகளுக்கு அவர்கள் தம் பெற்றோர் இட்ட பெயர் மருணீக்கியார்—அவரது செந் தமிழ் வளம் காரணமாக இறைவனே திருநாவுக்கரசு என்னும் பெயரை வழங்கியது மட்டுமன்றி ''இத்திருப் பெயர் எழுலகும் பரவுக'' எனக் கட்டளையிட்டார். ஆதலினால் இப்பெயர் ஒரு ''பெருநாமம்''. இப்பெயரை எழுதி வைத்தும் கூறிக்கொண்டும் வந்ததால் முத்திபெற்றார் அப்பூதி அடிகள் என்பதை ''திருநாவுக்கரசு என்னுமோர் சொற்றான் எழுதியும் கூறியும் என்றும் துன்பில் பதம் பெற்றார் ஒரு நம்பியப்பூதி'' என்பதால் அறிந்து கொள்ள லாம். நாவுக்கரசு என்னும் பெயரிலும், ''ஞானசம்பந்தர்'' ''நம்பியாரூரர்'' என்னும் பெயர்களைப் போன்று ஒற் றெழுத்துக்களை நீக்கிவிடின் திருவைந்தெழுத்துப்போன்று ஐந்தெழுத்து இருப்பதைப் பேரறிஞர்கள் எடுத்துக்காட்டு கின்றனர்.

நாவுக்கரசு என்னும் பெயருடன் அவருக்குத்திருஞான சம்பந்தர் சூடிய ''அப்பர்'' என்னும் பெயரும் நிலைபெற் றுள்ளது. சிவபெருமானது உரையே ஞானசம்பந்தர் உரை என்ற முறையிலும் திருஞானசம்பந்தர் சமயகுரவர் களுள் முதல்வர் என்ற முறையிலும் அப்பர் என அவர் இட்டபெயருக்குத் தனி மதிப்புள்ளது. இறைவனை அம்மையப்பனாக வழிபட்ட திருநாவுக்கரசு நாயனாருக்கு ''அப்பர்'' என்னும்பெயர் அமைந்ததிலும் பொருத்த முள்ளது.

''கதிரு லாவிய சபைதொறும் காலொன்று தூக்கி
அதிர விசிவின் ருடிய தாண்டவத்தார்க்கே
மதுர மாத்திரு தாண்டகச் செந்தமிழ் வகுத்த
சதுர னாவினுக்கரையன்றன் சரணமே சரணம்'',

—சிவ ரகசியம்.

# குன்றக்குரவை கூறும்

# தமிழர் வழிபாடுகள்

(வித்துவான். பெ. கோவிந்தன்.)

குன்றக்குரவை சிலப்பதிகாரத்திலுள்ள ஒரு பகுதி. கண்ணகி மதுரையையும் அதனை ஆண்ட அரசனையும் அழித்து வைகைக்கரை வழியாக நடந்து சென்று சேர நாட்டு நெடுவேள் குன்றத்தை யடைந்து பூத்த வேங்கை மரத்தின் கீழிருந்தாள். குருவியோப்பியும் கிளி கடிந்தும் அருவி யாடியும் வந்த குன்றத்து வாழ்ந்த குறமகளிர் சிலர் அவளைக் கண்டனர். கண்ணகியைக் கண்டு, "முலையிழந்து வந்து நின்றீர்! நீர் யாவர்" என்று வினவினர். "மதுரையையும் அரசையும் அழித்துக் கணவனையிழந்து போந்த கடுவினை யேன் யான்" என்று கண்ணகி அம்மகளிருக்கு விடை கொடுத்தாள். அவர்கள் அதனைக் கேட்டு அஞ்சி இறைஞ்சி நின்றனர். அப்பொழுது வானவர்கள் வந்து மலர்மாரி பொழிந்து கண்ணகிக்கு அவள் கணவனைக் காட்டி. அவளை வான் வழியாக அழைத்துச் சென்றனர் என்ற செய்தியைக் குன்றக்குரவை கூறுகிறது.

இப்பகுதியில் கண்ணகி தெய்வப்பேறு பெற்ற செய்தி யைக் கூறுமிடத்துத் தமிழர் வழிபாட்டு முறைகள் இரண்டு கூறப்படுகின்றன. குறவர் கண்ணகியைத் தெய்வப்பேறு பெற்றாளாகக் கொண்டு வழிபடுதல் என்பது ஒரு முறை. குறமகளிர் குரவையாடிக் குன்றத்துக் கடவுளாகிய முருகனை வழிபடுதல் என்பது மற்றொன்று.

கண்ணகி வேங்கைமரத்தின் கீழ் நின்ற செயலையும் அவளை வானவர்கள் வந்து மலர்மாரி பொழிந்து வான் வழியாக அழைத்துச் சென்ற செயலையும் குறமகளிர் கண்

கூடாகக் கண்டனராதலின் தெய்வப்பேறு பெற்ற கண்ணகிக்குக் கோவிலெடுத்து உருவம் அமைத்து வழிபாடு செய்ய எண்ணினர். குரவையாடிப் பாடிய பாட்டில் அதனை அவர்கள் பின்வருமாறு பாடுகின்றனர்.

நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே!
தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்
கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்
குறிஞ்சி பாடுமின், நறும்புகை யெடுமின்
பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுமின்
பரவலும் பரவுமின், விரவுமலர் தூவுமின்
ஒருமுலை யிழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே.

தெய்வப்பேறு பெற்றாரைத் தெய்வமாகக் கொண்டு வழிபடல் தமிழர் மரபு. தெய்வப்பேறு பெற்றார் ஆடவராகவும் மகளிராகவும் இருக்கலாம். இருபாலரும் தெய்வப்பேறு பெறுவர் என்பது தமிழர் சமயத் துறக்கக் கோட்பாடாம். புறநானூற்றுள் போர்க்களத்தில் புண்பட்டிறந்த வீரர்களைத் தெய்வப்பேறு பெற்றாராகக் கொண்டு அவர்களுக்குக் கல் நட்டு வழிபட்ட செயலைப் பல பாடல்களில் காணலாம். கற்புடைய பெண்ணுக்குக் கல் நட்டு வழிபட்ட செயலைச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. தெய்வப்பேறு பெற்றார்க்குக் கல் நட்டு வழிபட்ட வழிபாடே பிற்காலத்தில் தமிழர் சமய நெறியில் நாயன்மார்களுக்கு உருவம் அமைத்து வழிபடும் வழிபாடாயிற்று.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை (குறள் 43)

என்பதில் தென்புலத்தார் என்பார் தமிழர்களுள் தெய்வப்பேறு பெற்றாராவர். "பிதிரர் (தென்புலத்தார்) ஆவார் படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட் சாதி" என்று பரிமேலழகர் கூறும் விளக்கம் பொருந்தா விளக்கமாம். தெய்வமும் விருந்தும் ஒக்கலும் தானும்

இல்லறத்தானுல் பேணப்படுதல் போல அயனுற் படைக்கப் பட்டதோர் கடவுட்சாதி இல்லறத்தானுல் பேணப்படுதல் நூல் வழக்கினும் உலக வழக்கினும் இன்மையானும் தமிழருள் தெய்வப்பேறு பெற்ருர் இல்லறத்தானுல் பேணப் படுதல் நூல் வழக்கினும் உலக வழக்கினும் உண்மையானும் பரிமேலழகர் விளக்கம் பொருந்தாமை காண்க.

மேலேகாட்டிய சிலப்பதிகாரத்துச் செய்யுட் பகுதியில் கூறப்படும் வழிபாட்டு முறைகள் தமிழர் கடவுள் வழிபாட்டு முறைகளாம். அம்முறைகள் இன்றும் தமிழர் கடவுள் வழிபாட்டுள் நாள் வழிபாட்டிலும் விழா வழிபாட்டிலும் இருத்தல் காண்க.

தலைவனுடைய மலையிலிருந்து விழும் அருவி நீரில் நீராடிய தலைமைத் தோழியும் ஏனைய தோழியரும் தலைவியும், முருகனுடைய கைவேலைப் புகழ்ந்து பாட நினைந்து, பாடுதற்கு எடுத்துக்கொண்டு, சூரனைக் கொன்ற அடரிலைய வேல், செந்தில் செங்கோடு வெண்குன்று ஏரகம் என்ற பதிகளில் நீங்காதுறையும் முருகன் வேலாகும் என்று முருகன் வேலைப் புகழ்ந்து பாடுகின்றனர். அதன் பின்பு, தலைவியின் களவொழுக்கத்தில் தலைவனுல் அவளுக்கு நேர்ந்த நோயையும் தலைவனுல் நேர்ந்த நோயை முருகனுல் நேர்ந்த நோயென்று தாய் பிழைபட எண்ணி, அதனை நீக்குவதற்கு வெறியாட்டெடுக்கவும் வேலனை வரவழைக்கவும் முயலும் முயற்சியையும் பாடுகின்றனர். தலைவிக்குத் தலைவனுல் நேர்ந்த நோயின் உண்மையை அறியாத தாயின் பிழைபட்ட செய்தியையும் தாயின் வேண்டுகோளுக்கிணங்கி வெறியாட்டெடுக்க வரும் வேலனுடைய பிழைபட்ட செய்தியையும் கூறி, தலைவியின் நோய்க்குக் காரணமல்லாத முருகன், வேலன் எடுக்கும் வெறியாட்டினுள் அவன் அழைப்பிற் கிணங்கி வருவானுயின் அவனும் மடவனுவான் என்ற தங்கள் கருத்தையும் அவர்கள் மூன்று பாட்டுக்களால் பாடுகின்றனர். அவற்றுள் ஒன்று பின்வருமாறு :

ஆய்வளை நல்லாய்! இதுநகை யாகின்றே
மாமலை வெற்பன்நோய் தீர்க்கவரும் வேலன்
வருமாயின் வேலன் மடவன் அவனின்
குருகு பெயர்க்குன்றம் கொன்றான் மடவன்.

தலைவி நோய் காரணமாக வேலன் எடுக்கும் வெறியாட்டினுள் முருகன் வருவானாயின் அவனிடம் தலைவிக்கு நடக்கவேண்டும் மணவணியை நாம் வேண்டுவோம். களவொழுக்கத்தோடு தொடர்புடைய தலைவனோடு கூடிய மணத்தைத் தலைவிக்கு நடக்கும்படி அருள்செய்க. களவொழுக்கத்திற்குத் தொடர்பல்லாத தலைவனைக்குறித்துப் பெற்றோர் பேசும் அயல்மணத்தை ஒழிப்பாயாக. அறுமுக ஒருவ! 'சீர்த்துறையில் நின்று, தலைவி மணங்குறித்து நினது திருவடிகளை நினைந்து சூள்செய்து தொழுத தலைவன் தலைவியோடு செய்யும் மணவினையைப் பெறுவானாக. தலைவி களவொழுக்கத்திற்குத் தொடர்பல்லாத தலைவனுடைய மணப்பேச்சை நீக்குவாயாக என்றும் அம்மகளிர் முருகனிடம் வேண்டுகோள் செய்து பாடுகின்றனர்.

குன்றக்குரவை தமிழர் கடவுளாகிய முருகனைப்பற்றிய சில சமயச்செய்திகளை நமக்கு எடுத்துரைக்கிறது. "முருகன் ஆலமர் செல்வன புதல்வன்; மலைமகள் மகன்; அறுமுகன்; பிணிமுகமேற்கொள்வோன்; நீலப் பறவைமேல் நேரிழை தன்னொடு வருபவன்; அலர் கடம்பன்; வேலனால் வணங்கப் படுபவன்; வேலனால் எடுக்கப்படும் வெறியாட்டிற்கு வருபவன்; மக்கள் நோயை நீக்குபவன்; வேண்டுவார்க்கு வேண்டுவன அருள் செய்து வேண்டாதவற்றை நீக்குபவன்; வேலையுடையவன்; அவ்வேலால் சூரனைக்கொன்றவன்; செந்தில், செங்கோடு, வெண்குன்று, ஏரகம் என்ற பதிகளில் நீங்காதுறைபவன்" என்று முருகன் குன்றக்குரவையில் கூறப்படுதல் காண்க.

முருகனைப் பல பதிகளிலுள்ள கோவில்களில் உருவம் அமைத்தலும் வேலன் முருகனுக்கு வெறியாட்டெடுத்தலும் அவ்வெறியாட்டில் முருகன் வந்து வெறியாட்டெடுத்தார்

இடர்களை நீக்குதலும் மக்கள் முருகனிடம் தாம் விரும்பும் வேண்டுகோளைச் செய்தலும் தமிழர் முருகனை வழி படும் வழிபாட்டு முறைகள் என்று குன்றக்குரவை நமக் குக் கூறுகிறது. குன்றக் குரவை கூறும் செய்திகளைச் செவ்வேள் பரிபாடல்களும் முருகாற்றுப்படையும் எடுத் துரைக்கின்றன.

பிற்காலத்துத் திருமுறைகள் அனைத்திலும் சிவபெரு மானுடைய கோவில்களையும் அவனுடைய பொதுவியல்பு சிறப்பியல்புகளையும் அவனுடைய ஊர் திபடை போர்வென்றி களையும் அவனுடைய விழாக்களையும் அவன் மக்களுக்குச் செய்த அருட்செயல்களையும் நாயன்மார்கள் நீராலும் பூவா லும் புகையாலும் வணங்கித் தங்கள் வேண்டுகோள் பல வற்றைக் கூறி வழிபடுதலையும் நாம் காண்கிறோம். வீரர் களுக்குக் கல்நட்டு வழிபட்ட வழிபாடும் மகளிர்க்குக் கல் நட்டு வழிபட்ட வழிபாடும் ஆடவரும் பெண்டிருமாகிய பிற்கால நாயன்மார்கள் வழிபாடாதல்போலக் குன்றக்குரவை கூறும் முருகன் வழிபாட்டு முறைகளும் பரிபாடலுள் செவ் வேள் பரிபாடல் கூறும் வழிபாட்டு முறைகளும் முருகாற் றுப்படை கூறும் வழிபாட்டு முறைகளும் பிற்காலத் திரு முறைகள் கூறும் தமிழர் வழிபாட்டு முறைகளாதல் காண்க.

வேத வழிபாடு வேள்விவழிபாடாதலும் உருவ வழி பாடாகாமையும் தமிழர் வழிபாடு உருவ வழிபாடாதலும் வேள்வி வழிபாடாகாமையுங் காண்க.

---

## வைகாசி மாத விசேட தினங்கள்

| | | |
|---|---|---|
| 6 | (19-5-66) | கழற்சிங்கநாயனார் விழா |
| 12 | (25-5-66) | நமிநந்தியடிகள் நாயனார் விழா<br>சேக்கிழார் சுவாமிகள் விழா |
| 13 | (26-5-66) | சோமாசி மாற நாயனார் விழா |
| 19 | ( 1-6-66) | திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் விழா |
| 22 | ( 4-6-66) | திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் விழா, முருக நாயனார் விழா, திருநீல கண்ட யாழ்ப்பாண நாயனார் விழா, திருநீல நக்க நாயனார் விழா. |

# திருமந்திரம் அரியவுரை

(அம்பை சங்கரனர்)

எழுகின்ற தீமுன்பு கொண்டு சென்றிட்ட
மெழுகு வரும்பரி சேவரு மெய்யை
உழுகின்ற சால்வழி யேயுழு தாலும்
விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே.

(என்பது) நெருப்பை யணைந்த மெழுகு உருகுந்தன்மை போலத் திரிகளுடை யாஞ்சகத்தாலும் உருப்பெற்றதாலுங் காரணங்களெல்லாந் தன் கண் எய்தலுண்டு மயங்கிச் செயல் மாண்டிருக்கிற சரீரமுங் குருகடாட்சம் பெற்றுக் கருவிகளை யொடுக்கி மேலான நிலத்திற் பிரகாசத்தைக் குறிக்கொள்ளு மாகில் முன்புள்ள செயல் நடக்கினுஞ் சுக்கில நீங்காததே என்றபடி..

எழுகின்ற தீயின் முன்கொண்டு சென்றிட்ட மெழுகு வரும் பரிசே வருமெய்யை என்பது எழுகின்ற நெருப்பிலே கொண்டு சென்றிட்ட மெழுகுருகிய தன்மை போலத் திரிகளும்......வழகாலும் தொழிலாலும் விளைக்கப்பட்டு ஆம் சகத்திலே காரணங்களெல்லாந் தன் கணெய்தலுண்டு வேறொரு செயற்பாடுகளாகாமலிருக்கிற உடம்பைக் கொண் டென்றபடி..

உழுகின்ற சால்வழியே யுழுதாலும் விழுகின்ற தில்லை வெளியறிவார்க்கே என்பது குருவருளிச் செய்தவுபாயப் படியே கருவிகளை யொடுக்கி மேலான நிலத்தில் வெளியைக் குறிக்கொள்ள வல்லார்க்கு முன்புபோலே செயல் நடக்கினு மிது நீங்காதன்றே யென்றவாறு.

(குறிப்பு) இச்செய்யுள் சமாஜப்பதிப்பு முதலிய மதிப்புகளில் சிறிது மாறுபட்டுக் காணப்படுகிறது.

எழுகின்ற தீயைமுன் னேகொண்டு சென்றிட்டால்
மெழுகுரு கும்பரி செய்திடும் மெய்யே
உழுகின்ற தில்லை ஒளியை அறிந்தபின்
விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே.

என்று வருவதை நோக்குக சால் என்பது குருவருளிச் செய்த உபதேசம். வெளி என்பது பிரகாசத்தைக் குறிக்கிறது.

முக்கண்ணி னூடற வாயுவை மூலத்தே
சிக்கென மூட்டித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிட நாசியைச் சாதிக்க
வைக்கு முயிர்நிலே வானவர் கோனே.

(என்பது) இடா பிங்கலேயில் வாயுச் செலலாத படியாகக் கீழ்நோக்கி நிற்கிற அபானனென்கிற வாயுவைப் பரித்துச் சுழிமுன்னுடிக்குள்ளே யாம்படியாகுஞ் சனத்தாலே பிடித்துத் திரிமண்டல செயம் பண்ணும்படி யக்கினியை வளர்க்கில் ஆயு நீங்காதபடி பரமசிவன் கடாட்சிக்குமே யென்று ஆகுஞ் சனத்தின் பெருமையை வியந்து சொல்லியது.

முக்கண்ணி னூடற வாயுவை மூலத்தே யென்பது திரிமண்டல செயம் பண்ணும்படியாக வாயுவை மூலத்தேயாக்கி யென்றபடி.

சிக்கென மூட்டித்திரித்துப் பிடித்திட்டு யென்பது மூலத்தின் மூளும்படி கீழ்நோக்கி நிற்கிற அபானனேச் சுழி முன்னுடிக்குள்ளேயாம்படி முறித்துப் பிடிபடுத்துக் கொண்டென்றபடி.

தக்கவலமிட நாசியைச் சாதிக்கில் என்பது வியாபாரமே தகுதியாயிருந்துள்ள இடா பிங்கலேயில் வாயுச் செல்லாத படியாக வென்றபடி.

வைக்குமுயிர் நிலே வானவர் கோனேயென்பது பிராணன் ஒருக்காலு மழிவு வாராத படியாகப் பரமசிவனுனவன் கடாட்சத்தை மிகவும் வைக்கும் என்றவாறு.

(குறிப்பு) இச் செய்யுள் சமாஜப்பதிப்பு முதலியவற்றில் சிறிது மாறுபட அச்சிடப்பட்டுள்ளது.

முக்கண மூடற வாயுவை மூலத்தே
சிக்கென முடித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிடம நாழிகை சாதிக்க
வைக்கும் உயிர்நிலே வானவர் கோனே.

என்று அச்சுப் பதிப்புகளில் வருவதை நோக்குக. திருமந்திரப்பதிப்பு ஏடுகளைச் சோதித்து வெளியிட்டால் இதுபோன்று பல பாடபேதங்கள் கிடைக்கலாமெனத் தெரிகின்றது. ஆனால் அவைகளுள் இதுதான் சரியான பாடம் என்று அறுதியிட்டுக்கூறற்குரிய யோகசாதன அறிவு கைவந்தவர்கள் இக்காலத்து மிகவும் அருகியே யிருப்பர். அவர்கள் இது போன்ற பதிப்பு வெளிவாற்குச் சிறிது ஊக்கம் காட்டின் நன்றாயிருக்கும். யோக நெறிக்குப் புத்துயிர் கொடுத்த பெருமை அவர்களைச் சாரும். தக்க வலமிடம் நாசியைச் சாதிக்க வெனினும், நாழிகை சாதிக்க வெனினும் நம்மனோர்க்கு இரு பாடங்களும் பொருத்த மாகவே தோன்றுகின்றன. அத்துறையில் கைவந்தவர் களுக்கு இவ்விரண்டில் எது சிறப்புடைத்து என அறுதியிட் டுக் கூறல் இயலும். திருமந்திர மாநாடுநடத்தும் பெரியார் கள்பலரும் திருமந்திரத்தைப் பல ஏடுகளை ஆராய்ந்து பார்த் துப் பல பாடபேதங்களுடன் நன்முறையில் அச்சிட்டுத் தருவார்களே யானல் பொதுவாகத் தமிழுலகும் சிறப்பாகச் சைவவுலகமும் மிகவும் நன்றி செலுத்துங்கடப்பாடுடையன.

——o——

# முப்பது ஆண்டுகளுக்கு முன்

[சமரசம்' என்ற சொல்லைப் பலர் பல பொருள்களில் உபயோகப் படுத்துகின்றனர். 'சமரசம்' என்றால் என்ன? என்பதே ஒரு சிக்கலான கேள்வி.

ஒருசிலர் சமரசத்தின் பெயரால் சமயங்களையும் சமயா சாரியர்களையுங்குறைகூறுகின்றனர். இது குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வது போலாகும்—போரை நிறுத்த போர் தொடுப்பது போலாகும். மற்றும் சிலர் புது கருத் துக்களை அல்லது புது முறைகளை அறவே வெறுக்கின்றனர்.

இதுவும் தவறு. பழைய உண்மைகளைப் புது முறையில் காண்பதிலும் இன்பம் உண்டு. "சைவமே சமரச சமயம்" என்ற தலைப்பில் 1928 ஆம் பிப்ரவரி மீ சித்தாந்தத்தில் வெளிவந்த கட்டுரையினின்று சில பாகங்கள் கீழே தரப்படுகின்றன. இவை படித்து சிந்திக்கற்பாலவை.

கொ. நீ. சிங்காரவேலு.

## சைவமே சமரச சமயம்
### (பத்திராசிரியர் 1928)

இந்நிலவுலகிலே பலதிறப்பட்ட மக்கள் வாழ்கின்றனர்; ஒவ்வொருவரும் ஒவ்வொருவகையான அறிவும் விருப்பமும் ஆற்றலும் வாய்ந்தவராகக் காணப்படுவர். ஒரே வயிற்றிற் பிறந்தோரும் தம்முள் பெரிதும் அறிவு விருப்பங்களால் வேற்றுமைப்பட்டிருத்தலைக் காண்கிறோம். இங்ஙனம் உண்மை இருத்தலால் எல்லோரும் ஒரேவகையாக என்றும் இருத்தல் இயலாது. அதனால் மக்களுக்குக் காலந்தோறும் மத வேறுபாடுகள் உண்டாதலும் புதிய மதங்களில் பற்று நிகழ்தலும் இயல்பேயாம். நமது சைவசித்தாந்தமும் தோன்றிய நாள்தொட்டு ஒரே வகையில் இருந்தது என்று கூறலாகாது; அதுவும் காலந்தோறும் அதனை அவலம்பிப்போர் அறிவு வளர்ச்சி மனப்பான்மை, நாகரிக முதிர்ச்சிக் கேற்றவாறு திரிந்தும் விரிந்தும் உயர்ந்தும் பரந்தும் வந்துகொண்டிருக்கிறது. எக்காலத்தும் ஒரே நிலையில் உயிருள்ள மதம் இருத்தல் இயற்கைக்குப் பொருந்காது. அங்ஙனம் ஒரு மதம் இருக்குமெனக் கொள்ளின் அஃது உயிரற்று இறந்துபடும் என்பது உணர்வுடையார் யாவர்க்கும் தெற்றெனப் புலப்படற்பாலதே.

இனிச் சமயங்களோ பல. இவை ஒன்று உரைக்குமாறு மற்றொன்று உரைத்தல் இல்லை. ஒவ்வொரு சமயத்தினரும் தம்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைவர்; எல்லாருக்கும் தனித்தனி மறைகளும் மறைமொழிகளும் உண்டு; எல்

லாருக்கும் கொள்கைகள் உண்டு; எல்லாச்சமயத்தும் அற்புதங்கள் நிகழ்ந்ததுண்டு; எல்லாருக்கும் இறைவன் திருவருள் புரிந்த கதைகள் அளப்பில உண்டு. இவ்வாறாயின் இவற்றுள் எச்சமயம மெய்ச்சமயம, எப்பொருள் மெய்ப்பொருள், எந்நூல் மெய்ந்நூல்? என்பன தெளிதற்பாலன.

எல்லாச் சமயங்களும் மெய்ச்சமயங்களே ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு வகையான நிலையிலேயுள்ள மக்கட்கே அன்றி உண்மை வேட்கை கொண்ட மக்கள் ஒரே நிலையினராயினும் ஒவ்வொரு காலத்திலே அவருக்கும் இன்றியமையாததாகும்.

எல்லா மதங்களும் ஒவ்வொரு நிலக்கு வேண்டப்படுவதேல் எல்லாச் சமய உண்மைகளையும் ஒருவன் கைப்பற்றி ஒழுகுவதா? அன்றி ஒவ்வொரு சமயத்தும் புகுந்துபுகுந்து வெளியேறுவதா? என்னின் அற்றன்று; எச்சமயம் எல்லாச் சமய உண்மைகளையும் தன்னகத்தே கொண்டு மிளிருமோ அச்சமயம் ஒன்றனையே கைக்கொண்டு அவ்வாறு ஒழுகின் அதுவே பெறத்தக்க பேற்றை அளித்துவிடும் என்பது—அற்றேல் எல்லாச்சமய உண்மைகளும் ஒருசமயத்தேகாணப் படுமாயின் அச்சமயம் ஒரு தனிச்சிறப்பை அடையமாட்டாது; ஏனெனின் அதற்குத் தனக்கென ஒன்று மின்மையின்; அங்ஙனம் உண்டெனப்படினும் பல சமயங்களோடு ஒன்றாகும எனின், அற்றன்று; எல்லாச் சமயங்களையும் தன்னகத்தே அடக்கிக்கொள்ளும் வியாபக இலக்கணமும் எச்சமயத்தையும் இஃது ஆகும் அஃது ஆகாது என்று கூறும் பிணக்கு இன்மையும் பல வேறு சமயங்களையும் தனக்குச் சோபன மார்க்கமென ஏற்றுக்கொள்ளுதலும் இச்சமயங்களால் அறியப்படாத நுண்பொருள்களை அறிந்து அவற்றை மேற்கொண்டிருத்தலும ஆகிய இத்தகைய சிறப்பியல்புகளால் அஃது எச்சமயத்துக்கும் மேலாகச் சிறந்தது மாய்ப் பலசமய சமுதாயமுமின்றாய்த் தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்த பேருண்மைச் சமயமாம் என்பது தெளியப்படும். இவ்வுண்மையினைத் தலைசிறந்த சைவசித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றாகிய சிவஞானசித்தியாரின் கண் வரும்,

'ஓதுசம யங்கள் பொருள் உணரும் நூல்கள்
ஒன்றோ டொன் றொவ்வாம லுளபலவும் இவற்றுள்
யாதுசமயம் பொருள்நூல் யாதிங் கென்னின்
இதுவாகும் அதுவல்ல தெனும் பிணக்கதின்றி
நீதியினுன் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதியா தொருசமயம் அதுசமயம் பொருள் நூல்
ஆதலினுன் இவையெல்லாம் அருமறை ஆகமத்தே
அடங்கிவிடும் அவைஇரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்'

என்னும் அருமைச் செய்யுளாலும் இனிதுணர்க.

இப்பொதுத் தன்மையினைச் சைவசமயத்தினர் வெறும் உரையால் மட்டும் விளக்கியவரல்லர்; செய்கையிலும் அழியாத வகையில் வெளிப்படையாகச் செய்து காட்டியுள்ளார். சிவாலயம் ஒன்றிலே சென்று ஆய்ந்தோய்ந்து பார்த்தால் இவ்வுண்மை எல்லாம் செவ்வனம் அறியப்படும். சிவாலயத்திலே அயன், திருமால், சூரியன், சந்திரன், இந்திரன், வருணன் முதலான எல்லாத் தேவர்களுடைய உருவங்களும் நிலைநிறுத்திப் பூசனை செய்யப்பட்டு வருதல் கண்கூடாம். சிவபூசை செய்வோரும் விஷ்ணு பூசைசெய்வார். இச்சீரிய உண்மை முற்றும் வெளிப்படையாக விளங்கித் தோன்றும் திருத்தளி, சிதம்பரமாதலின் அன்றே அது தலங்களில் முதலாகத் திகழ்வதாயிற்று. இங்கே ஒருசமயம் இல்லை; எல்லாச் சமயத்தாராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஞான சபையே காணப்படுகிறது. இதனை மறுப்பார் தமது சமயங்களையே மறுத்தவராவார். இதனைக் கண்ட துணையானே உண்மைச் சமயவாதிகள் யாவராயினும் தமதுமார்க்கம் அங்கேவெளியாக இருத்தலைக் கண்டு வணங்குவர் என்றும் அப்பெருமையை நினைக்க மாத்திரத்தே தமது கன்மமுங் கரைந்து விட்டதெனவும் தாயுமான சுவாமிகள் பின்வரும் அழகிய திருப்பாடலை அருளிச்செய்தனர்:-

'சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளுந் தானென்றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்டதில்லை
பகர்வரிய தில்லைமன்றுட் பார்த்தபோதங்

சென்மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியேஎன்ன
எச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சா நிற்பர்
சன்மார்க்க நெஞ்சமுள எனக்குந் தானே
கண்டவுடன் ஆனந்தங் காண்ட லாகும்!'

இதுகாறுங் கூறியவாற்றான் சைவமே சமரச சமயம் என்பது தெள்ளிதிற் புலப்படும் என்க.

---

# சைவசித்தாந்த மகா சமாஜம்

## சித்தாந்த சாத்திரப்பாடக் கோடை வகுப்பு.

மஞ்சக்கொல்லை (நாகப்பட்டினம் தாலுகா, தஞ்சை மாவட்டம்) யில் திருஞானசம்பந்த சபையின் ஆதரவில் 25-5-66 (சேக்கிழார் திருநாள்) முதல் 5-6-66 (திருஞான சம்பந்தர் திருநாள்) வரை 12 நாட்கள் திருக்களிற்றுப்படியாரும் கந்தரநுபூதியும் பாடமாக நடத்தப்பெறும்.

காஞ்சிபுரம் திரு. K. வச்சிரவேலு முதலியார் அவர்கள் (பி. ஏ., எல். டி.) வகுப்பின் ஆசிரியராகயிருந்து நடத்தித்தர இசைந்துள்ளார்கள். இதில் கலந்துகொள்ள விரும்பும் சமாஜ உறுப்பினர்கள் 16-5-66க்குள் R. சம்பந்தமூர்த்தி முதலியார் மஞ்சக்கொல்லை, நாகைப்பட்டினம் என்ற முகவரிக்கு அவசியம் தெரிவித்தல் வேண்டும். இதற்கு முன் பாடங்களில் கலந்து கொண்டவர்களுக்கு முதலிடம் தரப்பெறும். வகுப்பில் கலந்துகொள்ளத் தேர்ந்தெடுக்கப் பெறுபவர்களுக்கு 20-5-66க்குள் அழைப்பு அனுப்பப் பெறும். உணவு, உறையுள் முதலிய ஏற்பாடுகள் யாவும் செய்து தரப்பெறும்.

(செயலாளர்)



பரந்த மனப்பான்மை நிலையிலிருந்து எடுத்துரைக்கும் நோக்கம் உடையவர் அவர்.

இம்முதல் இதழ் விநாயகரைப் பற்றிய கட்டுரையோடு முறைப்படி தொடங்குகிறது. 'ஒன்றாகக் காண்பதே காட்சி' என்பதை இந்து மதம் குறிக்கோளாகக் கொண்டிருப்பதை Dr. T. M. P. மஹாதேவன் விளக்குகிறார். சைவ சித்தாந்தக் கொள்கைகள் தற்கால உலகிற்கும் விஞ்ஞான உலகிற்கும் பொருத்தமாவதை ஆராய்ந்து கூறுகிறார் ஆசிரியர். 'சைவமும் தமிழும்', 'சைவமும் காஷ்மீர் சைவமும்' 'சிவஞான போதம்' 'சைவ சித்தாந்தமும் விஞ்ஞானமும்' 'ஆழ்மன ஆராய்ச்சி' முதலிய கட்டுரைகள் முதலிதழிற்கு எழிலையும் சிறப்பையும் ஊட்டுகின்றன. பிரபல பத்திரிகைகளில் வரும் கட்டுரைகளின் சாரமும் குறிப்புகளும் புத்தக மதிப்புரைகளும் இடம் பெறுகின்றன. பத்திரிகையின் நோக்கத்திற்கும் மாண்புக்கும் அறிகுறியாக அனைத்தும் அமைந்துள்ளன. கட்டுரைகள் அனைத்தும் துறைபோகக்கற்ற அறிஞர்களின் சிந்தனைக்குச் சான்று பகர்கின்றன. இப்பத்திரிகை பல்லாண்டு வாழ்க.

சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் சமயக்கட்டளைப்படி நம் சமாஜத்தின் சார்பில் 24-4-66 அன்று திருமயிலை ஸ்ரீ வெள்ளீஸ்வரர் ஆலயத்தில் வித்துவான் அம்பை இரா. சங்கரனார் அவர்கள் "மங்கையர்க்கரசியார்" என்னும் பொருள் பற்றியும், 2-5-66 திங்கட்கிழமை ஸ்ரீ கபாலீச்சுரத்தில் சமாஜத் தலைவர் திரு. கோ. முத்துசாமி பிள்ளை ஐ. ஏ. எஸ். (ஓய்வு) அவர்கள் "உமாபதி சிவம்" என்னும் பொருள் பற்றியும் பேசினார்கள்.

## ஓர் அறிவிப்பு

சென்ற ஏப்ரல் மாத சித்தாந்த இதழில் வெளிவந்த "திருவான்மியூர்ச் சிவபெருமான் பதிகம்" என்ற பகுதி ஸ்ரீ முருகதாசசுவாமிகளின் பெயரர் வித்துவான் தி. மு. சங்கரலிங்கம் அவர்களால் சுவாமிகளின் கையெழுத்துப் பிரதியிலிருந்து படி எடுத்து நம் இதழுக்கு அனுப்பப் பெற்றது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

# பிற செய்திகள்

இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் 17-4-66 அன்று சபையின் ஸ்தாபகர், சதாவதானம், ஸ்ரீலஸ்ரீ நா. கதிரைவேற் பிள்ளை அவர்கள் நினைவு நாள் விழா திரு. சச்சிதானந்தம் பிள்ளை, B A., L.T., அவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. திரு. குடந்தை பாலு, வித்துவான் அம்பை இரா. சங்கரனர் ஆகியோர் முறையே திரு. வி. க. வினுடையவும் திரு. பிள்ளையவர்களினுடையவும் செயற்கருஞ் செயல்கள் பற்றிப் பேசினர்கள்.

ஆர்க்காடு கன்குரவீதி ஸ்ரீ வரசித்தி விநாயகப் பழநி ஆண்டவர் திருக்கோவில் வார வழிபாட்டுச்சங்க 9 ஆம் ஆண்டுவிழா சிறப்புற 1-5-66 அன்று நிகழ்ந்தது. கீ. இராமலிங்கனர் M.A., 'சுந்தரவாழ்வு' என்பது பற்றியும் வித்துவான் அம்பை இரா. சங்கரனர் "திருஞான சம்பந்தரும் கூட்டு வழிபாடும்" என்பது பற்றியும் பேசினர்கள்.

பழையனூர் திருவாலங்காடு ஸ்ரீ சாக்ஷிபூதேச்சுரர் ஆலயம் எழுபது வேளாண் பெருமக்கள் தீப்பாய்ந்த மணிமண்டப ஜீரணோத்தாரண மகாகும்பாபிடேக விழா 2-5-66 அன்று காலை 9 மணிக்கு நன்முறையில் நிகழ்ந்தது. இதனை ஒட்டிப் பல சிறப்பு நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன. வரலாற்றுச் சிறப்போடு மக்களின் சிறப்பு மாண்பினையும் ஞாபகப்படுத்தத் தக்க இம்மண்டபப் புனருத்தாரணக் கழகத்தினர் தமிழ், சைவ மக்களின் பாராட்டுக்குரியோர், ஆவர்.

திருவருணையில் அருணசலேச்சுரர் தேவத்தானப்புரவி மண்டபத்தில் திருத்தொண்டர் புராணச் சொற்பொழிவுகள் 25-4-66 திங்கள்கிழமை முதல் 30-6-66 வியாழக்கிழமை முடிய வித்துவான் அருள் திரு. சி. பொன்னுசாமி அடிகளாரால் 67 சொற்பொழிவுகளாக முறைப்படுத்தி நடத்தப்பெற்று வருகின்றன. இதனை நன் முறையில் ஏற்பாடு செய்த பெரிய புராணக் கமிட்டியார் பாராட்டுக்குரியோர் ஆவர்.

சிதம்பரம் கொற்றவன் குடி ஸ்ரீ உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் மடாலயத்தில் 2-5-66 திங்களன்று ஸ்ரீ உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் குருபூஜை சிறப்பாய் நிகழ்ந்தது. விருத்தாசலம் ஸ்ரீ குமரதேவர் மடம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள் ஆதீனகர்த்தர் அவர்கள் திருவருள் பார்வையின் கீழ் இச்சிறப்பு நன்முறையில் நிகழ்ந்தது பாராட்டத்தக்கது.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha ...ha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.